Phone: No. 2241

Regd. No. M. 5934

**ஜப்பானில் 60,000 தொழிலாளர் ஸ்ட்ரைக்**

டோக்யோ, மார்ச் 23—
ஜப்பானில் தனிப்பட்டோர் உடமையிலுள்ள 28 ரயில் வேக்களையும், அவற்றுடன் இணைந்த பஸ் போக்குவரத்துகளையும் சேர்ந்த 60,000 தொழிலாளர்கள் சம்பள உயர்வு கோரி 24 மணி நேர வேலைநிறுத்தம் செய்தனர்.

# ஜனசக்தி

தின இதழ். ஆசிரியர். ப. ஜீவானந்தம்

மலர் 14] பக்கம் 4 :: விலை 1 அணா [இதழ் 217

**அல்ஜீரிய தினம் மார்ச் 30—ல்**

புதுடில்லி, மார்ச் 24—
மார்ச் 30-ந் தேதியை அல்ஜீரியா தினமாகக் கொண்டாடுவதென்றும், அன்று நாடுபூராவிலும் அல்ஜீரிய மக்களின் விடுதலைப் போராட்டத்துக்கு ஆதரவு தெரிவிக்க பொதுக்கூட்டங்கள், ஊர்வலங்கள் நடத்துவதென்றும், இந்திய தேசியக் காங்கிரஸ் முடிவு செய்துள்ளது.

சென்னை 25-3-58 ஹேவிளம்பி, பங்குனி-12 செவ்வாய் (வெளியூர் 26-3-58 ஹேவிளம்பி, பங்குனி-13 புதன்)

# வங்கக் காங்கிரஸ் மீது குற்றச்சாட்டு

## பணமூட்டைகள், பர்மிட் வேட்டைக்காரர், பிற்போக்காளர் என ராஜினாமாச் செய்த சட்ட அமைச்சர் அம்பலப்படுத்துகிறார்

கல்கத்தா, மார்ச் 24—

**மேற்கு வங்காளத்தில் காங்கிரஸ் திட்டமிட்டு ஒரு போலீஸ் ஆட்சியை நிலைநாட்ட முயல்கிறது. ஆனால் இத்தகைய கொடுங்கோன்மையை அதிகார வர்க்க தர்பாரை மக்கள் அனுமதிக்கப்போவதில்லை என்று மேற்கு வங்க ராஜ்ய மந்திரி சபையிலிருந்து ராஜினாமாச் செய்துள்ள சட்ட மந்திரி சித்தார்த்தரே வங்க சட்டசபையில் முழக்கம் செய்தார்.**

தேசபந்து சித்தரஞ்சன தாஸரின் பேரப்பிள்ளையான திரு ரே இன்று வங்க சர்க்கார் அமைப்பு பிரிட்டிஷ் ஏகாதிபத்திய ஆதிக்கத்தின் வழியே ஏற்பட்டது எனவும், ஒரு க்ஷேம நல ஆட்சி ஸ்தாபிக்கப்பட வேண்டுமானால் இந்த அமைப்பு முற்றாக ஒழிக்கப்பட வேண்டும் என்றும் கூறினார்.

காங்கிரஸ் தலைவர்கள் சோஷலிஸத்தில் உறுதியான நம்பிக்கை வைத்திருக்கிறார்கள். நாட்டில் ஒரு புதிய சகாப்தத்தை ராஜ்ய விவகாரங்களில் புதிய நிலைமையைக் கொண்டுவருவார்கள். ஒரு புதிய சமூக அமைப்பை, வர்க்க பேதமற்ற, உண்மையான சோஷலிஸ ஆட்சியை நிறுவுவார்கள் என்ற உத்வேகத்தினால் நான் காங்கிரஸில் சேர்ந்து மந்திரி பதவி ஏற்றேன் என்று அவர் கூறினார்.

ஆனால் இதற்கு நேர் விரோதமாக காங்கிரஸ் தலைமை தார்மீக மதிப்பற்ற ஊழல் மிகுந்த பல ஹீனமான ஒரு நாட்டைத்தான் சிருஷ்டித்துள்ளது. திறமையற்ற சர்வசாதாரண ஆட்களும், பிற்போக்காளர்களும் காங்கிரஸிலும் சர்க்கார் நிர்வாகத்திலும் ஆதிக்கம் செலுத்துகின்றார்கள்.

வங்க காங்கிரஸ் கொள்கையற்ற பணக்கார தொழிலதிபர்கள், வர்த்தகர்கள், செல்வாக்குள்ள வர்க்கத்தினர் கைப்பொம்மையாகி விட்டது. இவர்களது ஆதிக்கத்தின் விளைவாக எப்படியாவது அதிகாரத்தில் ஒட்டிக்கொண்டு இருக்க வேண்டும் என்ற பேராசையால் மிகக் கேவலமான செயல்கள் நடக்கின்றன என்று அவர் குற்றம் சாட்டினார்.

லஞ்ச ஊழல்களைக் களைய முற்பட்டால் வர்த்தக சமூகத்திற்குப் பிடிக்காது. பாரபட்சமும், சந்தேகாஸ்பதமான லஞ்ச லாவண நடவடிக்கைகளும் அம்பலமாகிவிடும் என்ற அச்சம் என்று அவர் கூறினார்.

முதலமைச்சர் மற்ற அமைச்சர்களை அசட்டைசெய்து சர்வாதிகாரப் போக்கில் நடந்துகொண்டார் என்று கூறினார்.

உணவு இலாகாவில் ஊழல் முடைநாற்றம் வீசுவது பற்றிக் குறிப்பிட்ட அவர், பல ஊழல் பேர்வழிகள் பர்மிட்கள் வாங்கி அரிசி வியாபாரத்தில் கொள்ளையடித்தார்கள் என்றும், விவசாயிகளுக்கு நியாயவிலை கொடுக்காமல் மில் முதலாளிகள் லாபக் கொள்ளையடித்தனர் என்றும் குறிப்பிட்டார்.

வங்காளத்தில் படித்து வேலையில்லாமல் திண்டாடும் சுமார் 2 லட்சம் பேர் உட்பட 12 லட்சம் பேர் வேலையின்றித் திண்டாடுகிறார்கள் என்றும் சர்க்கார் ஊழியர்களின் ஒத்துழைப்பு தியாகம் இவற்றை சர்க்கார் என்றும் பெறமுடியாது என்றும் அவர் குறிப்பிட்டார்.

மனப்பூர்வமாகப் பணியாற்ற வேண்டும் என்ற ஆர்வத்துடன் வந்த பலர் காங்கிரஸிலிருந்து வெளியேறி வேறு லட்சியப் பாதையில் சென்று கொண்டிருக்கிறார்கள் என்பதைச் சுட்டிக்காட்டினார்.

இந்த சர்க்கார் வங்க மக்கள் வாழ்வதற்கு உதவாது. மாறாக அவர்களது வீழ்ச்சிக்கும் நாசத்திற்குமே கொண்டு செல்லும் என்று அவர் மனம் வெதும்பிக் கூறினார்.

தமது ராஜினாமாக் கடிதத்தில் அவர் தமக்கும் வங்க சர்க்காருக்கும் பல பிரச்சினைகளில் அடிப்படையான கருத்து வேற்றுமை இருக்கிறது என்றும், லட்சியத்திற்காகப் பணியாற்ற விழைந்தால் வெளியேறியே தீரவேண்டும் என்றும் குறிப்பிட்டுள்ளார்.

## ராஜ்யசபைக்கு ஜனநாயக காங்கிரஸ் அபேட்சகர்கள் வெற்றி

### தி. மு. க. அபேட்சகருக்கு 2 தி.மு.க. எம்.எல்.ஏ.கள், ஓட்டளிக்கவில்லை

சென்னை, மார்ச் 25—

டெல்லி ராஜ்ய சபைக்கு 6 உறுப்பினர்களையும், சென்னை மேல் சபைக்கு 7 உறுப்பினர்களையும் நேற்று சென்னை சட்டசபை (அசெம்பிளி) தேர்ந்தெடுத்தது.

காங்கிரஸிற்கு மிகப் பெரிய மெஜாரிட்டி இருப்பதால் ராஜ்ய சபைக்கு டி. எஸ். அவினாசிலிங்கம் செட்டியார், ஜி. ராஜகோபாலன், பி. பரமேஸ்வரன், எஸ். சட்டநாதக் கரையாளர், என். எம். லிங்கம் ஆகிய ஐந்து காங்கிரஸ்காரர்கள் தேவையான ஓட்டுகளைப் பெற்றுத் தேர்ந்தெடுக்கப் பெற்றனர்.

ஜனநாயகக் காங்கிரஸ் சார்பில் நின்ற எச் டி. ராஜா தேவைக்கு அதிகமாக 28 ஓட்டுகள் (9 ஓட்டுகள் அதிகம்) பெற்று வெற்றி பெற்றார்.

தி.மு.க. சார்பில் நின்ற சி. கல்யாணசுந்தரம் 13 ஓட்டுகளே பெற்று தோல்வியடைந்தார் (தி.மு.க விற்கு சட்ட சபையில் உள்ள ஓட்டு 15 என்பது யாவருக்கும் தெரிந்ததே. அதாவது தி. மு. க. அபேட்சகருக்கு இரு தி மு க. எம்.எல்.ஏக்களின் ஓட்டுகள் கிடைக்கவில்லை)

**சென்னை மேல்சபைக்கு**

சென்னை மேல்சபைக்கு ஏ. கஜபதி நாயக்கர் வி. எம். சுரேந்திரம், பி. கே. நல்லசாமி, டி எம். கண்ணப்பன், நல்லசேனாபதி ஆகிய காங்கிரஸ் காரர்களும் ஜனநாயக காங்கிரஸ் சார்பில் நின்ற எல். எஸ். கரையாளரும் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

தி.மு.க. சார்பில் நின்ற கே. கணபதியும் ஏனையோரும் தோற்றனர்.

## ராஜ்ய சபைக்கு கம்யூனிஸ்ட் தலைவர்கள் தேர்வு

### கேரளம், ஆந்திரத்தில் வெற்றி

திருவனந்தபுரம், மார்ச் 24—

கம்யூனிஸ்டு அபேட்சகர்களான தோழர்கள் சாலமன், சுப்பராவ் ஆகிய இருவரும் வெற்றி பெற்றார்கள். காங்கிரஸ் அபேட்சகர் ஸ்ரீமதி பாரதி ஒருவர்தான் வெற்றி பெற்றார். காங்கிரஸும் பி. எஸ். பி.யும், லீக்கும் ஆதரித்த சித்திராகிப் தோற்றார்.

ஆந்திரத்தில் கம்யூனிஸ்டு அபேட்சகர் தோழர் கே. எல். நரசிம்மன் வெற்றி பெற்றார். சோஷலிஸ்டு அபேட்சகர் தோழர் ஏ. சக்ரதாரும் ஜெயித்தார். நான்கு காங்கிரஸ்காரர்கள் ஜெயித்தார்கள்.

## மத்திய, வடக்கு சுமத்ராவில் கலகப்படைகள் ஓட்டம்

### பல இடங்களை சர்க்கார் படைகள் திரும்பப் பிடித்தன

ஜகர்தா, மார்ச் 23—

மத்திய சுமத்ராவில் முக்கிய எண்ணெய் தளமான ரெங்காட் என்ற இடத்திற்கு அருகிலுள்ள காம்லிரிக் என்ற விமான நிலையத்தை கலகக்காரரிடமிருந்து இந்தோனேஷிய சர்க்கார் படைகள் பிடித்துவிட்டன என்று இந்தோனேஷிய ராணுவப் பிரதிநிதி லெப்டினெட் கர்னல் பிர்ங்காடி தெரிவித்தார்.

ரெங்காட்டிலிருந்த வெளிநாட்டார், சர்க்கார் படைகளுக்கு உதவி செய்தனர் என்றும், பிறகு அவர்கள் பத்திரமாக வெளியேற்றப்பட்டனர் என்றும் ஜகர்தா ரேடியோ தெரிவித்தது.

மேலும் வடக்கு சுமத்திராவில் அரசாங்கப் படைகள் ப்ரிபாட் என்ற இடத்தையும் திரும்பப் பிடித்துள்ளன. கிழக்கு மத்திய சுமத்திராவில் இன்னும் 3 இடங்களையும் மத்திய சர்க்கார் துருப்புகள் பிடித்துள்ளன என்றும், மத்திய சுமத்திராவில் வெளிநாட்டவர்களின் எண்ணெய்க் கிணறுகளுக்கு சர்க்கார் படைகள் பாதுகாப்பளித்தன என்றும் அறிவிக்கப்பட்டுள்ளது.

## திருச்சி சிறையில் தஞ்சை விவசாயி சிவலிங்கம் மரணம்

### காங்கிரஸ் அடக்குமுறைக்கு பலி; தியாகியின் பேரால் சபதம்

திருச்சி, மார்ச் 24—

**சமீபத்தில் சென்னை அரசாங்கம் தஞ்சை ஜில்லாவில் ஏராளமான விவசாயிகளையும், கம்யூனிஸ்ட் தலைவர்களையும் கைது செய்து சிறையிலடைத்ததல்லவா? அவ்வாறு கைது செய்யப்பட்டு திருச்சி சிறையில் அடைக்கப்பட்டிருந்த விவசாயிகளில் மாயவரம் தாலூகா மணல்மேடு ரேஞ்ச் வல்லத்தைச் சேர்ந்த சிவலிங்கம் என்ற ஒரு ஹரிஜன விவசாயி மார்ச் 21-ந் தேதியன்று உயிர் நீத்தார் என்ற செய்தியை ஆழ்ந்த துக்கத்துடன் தெரிவித்துக் கொள்ளுகிறோம்.**

தஞ்சை ஜில்லாவில் கைது செய்யப்பட்டு திருச்சி சிறையில் அடைக்கப்பட்ட 250 விவசாயிகளில் தோழர் சிவலிங்கமும் ஒருவர்.

சிறையிலிருக்கும்போதே தோழர் சிவலிங்கத்தின் உடல் நிலை மோசமாயிற்று. ஆகவே அவர் திருச்சி தலைமை ஆஸ்பத்திரிக்குக் கொண்டு போகப்பட்டார். அவருடைய நிலை மேலும் மோசமாயிற்று. ஆகவே அவர் ஆஸ்பத்திரியிலிருக்கும்போதே ஜாமீனில்விடுதலை செய்யப்பட்டார். ஆயினும், அவர் நிலைமையில் கொஞ்சமும் குணமேற்படாததால் அவர் தொடர்ந்து ஆஸ்பத்திரியிலேயே இருந்தார். கடைசியில் 21-3-58 அன்று அவர் உயிர்நீத்தார்.

22-ந் தேதி இரவுதான் இந்தச் செய்தி அவருடைய உறவினர்களுக்கும், மாயவரத்திலுள்ள தோழர்களுக்கும் தெரியவந்தது.

**தோழர்கள் கூடினர்**

23-ந் தேதியன்று, திருச்சியிலுள்ள தோழர்களுக்கு இச்செய்தி தெரிந்ததும் கம்யூனிஸ்ட் கட்சித் தோழர்களும், விவசாய சங்க, தொழிற்சங்கத் தோழர்களும் மாயவரம் தாலூகாவைச் சேர்ந்த தோழர்களும் தோழர் எம். கல்யாணசுந்தரம் (எம். எல். ஏ.) தலைமையில் திருச்சி தலைமை ஆஸ்பத்திரிக்குச் சென்றனர். மாலை 5-30 மணிக்கு தோழர் சிவலிங்கத்தின் சடலம் அவர்களிடம் ஒப்படைக்கப்பட்டது.

**சவ ஊர்வலம்**

மாலை திருச்சியில் நடைபெற்ற சவ ஊர்வலத்தில் 400-க்கு மேற்பட்ட கம்யூனிஸ்ட், தொழிற்சங்க விவசாய சங்க ஊழியர்கள் பங்கெடுத்துக் கொண்டனர். கொடிகளெல்லாம் அரைக் கம்பத்திற்குத் தாழ்த்திப் பறக்கவிடப்பட்டன. தென்னூர் மயானத்தில் சவம் எரிக்கப்பட்டது. சவ எரிப்புக்கு முன்னர் பல தொழிற்சங்கங்கள், விவசாய சங்கங்கள், கட்சிக் கிளைகள், வாசகசாலைகள் சார்பில் மலர் வளையங்கள் சமர்ப்பிக்கப்பட்டு அஞ்சலி செய்யப்பட்டது.

**அஞ்சலி**

இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சியின் தமிழ்நாடு கமிட்டியின் சார்பிலும், திருச்சி ஜில்லாக் கமிட்டியின் சார்பிலும் தோழர் பி. ராமச்சந்திரன் திருச்சி நகர் கமிட்டி, தொழிற் சங்கங்கள் சார்பில் தோழர் சக்ரபாணி, ஜில்லா விவசாயிகள் சங்க சார்பில் தோழர் நாகு, மாயவரம் தாலூகா கிசான் சபை சார்பில் தோழர் மருதையன் ஆகியோர் உயிர்நீத்த தோழர் சிவலிங்கத்தின் நினைவுக்கு அஞ்சலி செய்து பேசினர்.

**சபதம்**

நிலப்பிரபுத்துவத்திற்கு எதிரான போராட்டத்தில் சிவலிங்கம் உயிர் நீத்தார் என்றும், விவசாயிகள் சங்கத்தை இன்னும் பலமாகக் கட்டுவோம் என்றும், தொழிலாளி—விவசாயி ஒற்றுமையை ஏற்படுத்துவோம் என்றும், கம்யூனிஸ்ட் கட்சியை பலப்படுத்துவோம் என்றும், உயிர் நீத்த தியாகியின் பேரால் சபதமெடுத்துக் கொண்டனர்.

# ஜனசக்தி

சென்னை 25-3-1958


## செத்த பாம்பிற்கு ஜீவன் தர முயற்சியா?

மொழி வாரியாக கேரள ராஜ்யம் அமைக்கப் பட்டது. கேரள காங்கிரஸ் தலைவர்களுக்கு இது வேம்பாய்க் கசந்தது. அவர்களிடையே ஊக்கமோ உற்சாகமோ, மகிழ்ச்சியோ பரவசமோ ஏற்படவில்லை. மாருக மௌனமும் துக்கமுமே காணப் பட்டன. இதை கம்யூனிஸ்ட் கட்சி எடுத்துக் காட்டி இடித்துக் கூறிய போது, இல்லை! இல்லை! நாங்களும் மொழி வாரி கேரளத்திற்கு ஆதரவாளர் தான் என்று வேண்டாத வெறுப்பாகக் கூறினர்கள்.

ஆனல் உண்மை எப்படியும் வெளியாகியே தீருமல்லவா? நெருப்பில்லாமல் புகை தோன்றுமா? இப்போது ஒரு சாட்சாத் காங்கிரஸ் எம். எல். ஏ. கேரளம், சென்னை, ஆந்திரம், மைசூர் ராஜ்யங்களை ஒன்று சேர்த்து தக்ஷிண ராஜ்யம் அமைக்க வேண்டும் என்ற தீர்மானத்தை கேரள சட்ட சபையில் கொண்டு வருவதாக முன்னறிக்கை செய்திருக்கிருர். இவர் தேவிகுளம் தொகுதியிலிருந்து தேர்ந்தெடுக்கப் பெற்றுள்ள காங்கிரஸ் எம். எல். ஏ. கணபதியாவார்.

இந்தத் தீர்மானம் பற்றி கேரள மாநில காங்கிரஸ் கமிட்டிக்குத் தெரியுமா? தெரிந்து அதன் அனுமதி பெற்றுத் தான் இந்தத் தீர்மானம் கொண்டு வரப்படுகிறதா என்பது தெளிவாகவில்லை. மொழி வழி ஆட்சி ஏற்பட்ட பின் மக்களின் உண்மையான குரல் ஒலிப்பதைக் கண்டு பீதியடைந்த காங்கிரஸ் தலைமை இதற்குப் பின்னணியில் இருக்கிறதா என்பது தெரியவில்லை.

மொழிவாரி இராஜ்ய அமைப்பை எதிர்த்து இருமொழி ராஜ்யத்தைத் திணித்ததன் விளைவுகளைப் பார்த்தோம். மகாராஷ்டிர குஜரத் சௌராஷ்டிர மக்கள் காங்கிரஸின் முடிவை ஆட்சேபித்துப் பொங்கி எழுந்துள்ளனர். பம்பாய் சட்ட சபை உப தேர்தல்களிலும், குஜரத், சௌராஷ்டிரா பிரதேசங்களில் நகரசபைத் தேர்தல்களிலும் காங்கிரஸ் படுதோல்வியடைந்துள்ளது. காரணம் மொழி வழி ஆட்சி என்ற மக்கள் கோரிக்கைக்கு அங்கெல்லாம் காங்கிரஸ் எதிராகப் போவது தான். இந்த ஜன விரோதப் போக்கின் விளைவால் காங்கிரஸ் கோட்டைகள் பலதகர்ந்து வருகின்றன.

இத்தகைய கட்டத்தில் கேரளத்தில் ஒரு காங்கிரஸ் எம். எல். ஏ. தக்ஷிண ராஜ்யம் ஏற்படுத்தத் தீர்மானம் கொண்டு வருகிருர் என்றல் ஆச்சர்யமாக இருக்கிறது. கேரளத்தில் படுதோல்வியடைந்த காங்கிரஸ் கேரளம் மொழிவாரி ராஜ்யமாக இயங்கும் வரையில் தனக்குக் கதிமோட்சம் கிடையாது என்று கருதுகிறதா?

ஜனநாயக ரீதியில் தேர்தலில் நின்று ஜெயிக்க முடியாது எனக் கண்டு தக்ஷிணப் பிரதேச கோஷத்தை முழக்குகிறதா? காங்கிரஸ் அங்கத்தினர் கொண்டு வந்துள்ள இந்தத் தீர்மானத்தின் உள்நோக்கம் இதுவானல் படுதோல்வி அடைவர் என்பதை நாம் கூறத் தேவை இல்லை. தக்ஷிணப் பிரதேசம் செத்த பாம்பாகி விட்டது. அதற்கு ஜீவன் தானம் கொடுக்க யாராலும் முடியாது. தட்சிணப் பிரதேச கோரிக்கைக்கு தமிழ் மக்கள் ஒரு நாளும் ஆதரவு தரப் போவதில்லை என்பதை திரு. கணபதி நன்கு தெரிந்து கொள்ளட்டும். தட்சிணப் பிரதேசம் என்று இனிமேல் தமிழகத்தில் யார் பேச வந்தாலும் சரி அல்லது தமிழனது நலனுக்காக யாராவது தட்சிணப் பிரதேசம் கோருவதாக நினைத்துக் கொண்டாலும் சரி, அவர்கள் தமிழ் மக்களின் பரம விரோதிகளாகவே கருதப்படுவர். காங்கிரஸின் தோல்விப் பட்டியலில் மேலும் ஒரு தோல்வியாகவே திரு. கணபதியின் தீர்மானத்தின் கதி இருக்கும் என்பதில் சந்தேகம் வேண்டாம்.

## அமிர்தசரஸ் காங்கிரஸ் பிரதிநிதிகளுக்கு அவசர அறிவிப்பு

ஏப்ரல் 1-ந் தேதியிலிருந்து பதன்காட் ரெயில்வே நிலையத்திற்குப் போக வர ரிட்டர்ன் டிக்கட் 1½ சார்ஜில் கிடைக்கும். புறப்படுவதற்கு ஏழு நாட்களுக்கு முன்பே இடம் ரிசர்வ் செய்துகொள்ளலாம். ஏப்ரல் 2-ந் தேதி வண்டிக்கு மார்ச் 26-ந் தேதியிலிருந்தும், 3-ந் தேதி வண்டிக்கு மார்ச் 27-ந் தேதியிலிருந்தும் ரிசர்வ் செய்யலாம். உடனடியாகப் பணமும், விபரங்களும் மாகாணக் கமிட்டி காரியாலயத்துக்கு அனுப்பி வைத்தால் டிக்கட் வாங்கி இடம் ரிசர்வ் செய்து கொடுக்கப்படும்.

மாகாணக் கமிட்டிக் காரியாலயம்.

## உயர்தர விஞ்ஞானக் கல்விக்கு உபகாரச் சம்பளங்கள்

### இந்திய மாணவர்களுக்கு சோவியத் யூனியன் உதவி

புதுடெல்லி, மார்ச். 20—

வருடந்தோறும் பதினெரு இந்திய மாணவர்கள் சோவியத் ரஷ்யா சென்று உயர்தர விஞ்ஞானக் கல்வி கற்க ஏற்பாடுகள் செய்யப்பட்டுள்ளன. இதற்குரிய உபகாரச் சம்பளங்கள் ஐந்தாண்டுகளுக்கு ரஷ்யா அளிக்கும்.

#### பதினெரு பேர் தேர்வு

பட்டப் படிப்புக்கு மேல் படிப்பு, ஆராய்ச்சிகள் இத்துறைகளுக்கே இந்த உதவி அளிக்கப்படுகிறது. இந்த உபகாரச் சம்பளங்கள் அடிப்படை விஞ்ஞானக் கல்வி, தொழில் நுட்பக்கல்வி. இரு துறைகளுக்கும் அளிக்கப்படுகின்றன. தாவர இயல், இரசாயனம், புள்ளி கணிதம், மின்சார எஞ்சினீயரிங், பெட்ரோலியம் காஸ் எஞ்சினியரிங், இரசாயன எஞ்சினீயரிங், மெக்கானிக்ஸ் முதலியவற்றுக்கு உதவியளிக்கப்படுகிறது.

இதோடு வைத்தியம், விவசாயத் துறைகளில் உயர்கல்வி பெறவும் வசதியுண்டு.

1957-58-ம் வருடத்திற்கு இந்திய சர்க்கார் கல்வி இலாகாவுக்கு சோவியத் நாடு சென்று படிக்க விருப்பமுள்ள 314 பேர்களிடமிருந்து விண்ணப்பங்கள் வந்தன. இதில் 61 பேர் தகுந்த யோக்கிய தாம்சமுள்ளவர்கள். பதினெரு பேர் தேர்ந்தெடுக்கப்பட்டனர். இதில் 10 பேர் ஏற்கனவே ரஷ்யா சென்றுவிட்டனர்.

இவர்களில் இருவர் இரசாயனம் படிப்பர், இருவர் கணிதமும், பௌதிகம், தாவர இயல், புள்ளி கணிதம், சுரங்க இயல், இரசாயன எஞ்சினீயரிங், பால் பண்ணைக் கலைகளில், துறைக்கு ஒருவர் படிப்பார்கள்.

ரஷ்யாவில் அவர்கள் தங்கியிருக்கும்போது மாதம் 1750 ரூபாய் இவர்களுக்கு அலவன்ஸ் கொடுக்கப்படும். இதுதவிர உடைகளுக்கு ரூ. 3,500, ஓய்வுவிடுதிகளில் தங்க ரூ. 1785 சோவியத் சர்க்காரால் அளிக்கப்படும். இ. பி. ஏ.

## அலையோசை

"தி. மு. க.வுக்கே உண்மையில் நாடு பிரிய வேண்டும் என்ற கொள்கையில் நம்பிக்கையில்லை', தங்களை ஆதரிப்பவர்களின் ஆதரவை இழக்க நேரிடுமே என்ற காரணத்தால் எங்கள் கட்சி வெளிப்படையாக கொள்கையை விட்டுக்கொடுக்கப் பயப்படுகிறது" என்று தி.மு.க. பொதுச் செயலாளர் நெடுஞ்செழியன் தனிப்பட்டமுறையில் என்னிடம் சொன்னர். திருவல்லிக்கேணி கடற்கரையில் மாஜி மக்கள் முன்னேற்ற கட்சியின் தலைவர் திரு. எஸ். செல்லச்சாமி,

தனிப்பட்ட முறையில் சொன்ன உண்மையான விஷயங்களை வெளிப்படையாக சொல்வது நல்லதல்ல என்று நெடுஞ்செழியன் பதில் கூறலாம்.

*   *

மொரார்ஜி தேசாய் நிதிமந்திரியானதிலிருந்து, பம்பாய் மார்க்கெட்டுகள் மிகவும் நல்ல குணத்துடன் (good temper) இருக்கின்றன. வியாபார பெருமக்கள் மிகவும் மகிழ்ச்சி அடைவதுடன், மொரார்ஜி தேசாயை தங்களது நண்பனுக கருதுகிருர்கள்.

—பம்பாய் மார்க்கெட் தலால் தெரு செய்தி. எக்ஸ்பிரஸ் 4-ம் பக்கம் 16-3-58.

பாம்பின்கால் பாம்பிற்குத் தெரியும். புதிய நிதி மந்திரி யாருடைய நண்பர் என்று பார்த்தீர்களா?

*   *

'விளக்கெண்ணெ (costor oil) நல்ல அந்நிய செலாவணி சம்பாதிக்கும் ஒரு ஏற்றுமதிப் பொருள். டெல்லி சர்க்கார் விளக்கெண்ணை சம்பந்தமாக தனது கொள்கையை உடனே தெரிவிக்கவேண்டும்.

—எக்ஸ்பிரஸ் 4-ம் பக்கம், 3-ம் பத்தி 16-3-58.

வெளிநாட்டு வியாபார விஷயத்தில் டெல்லி சர்க்கார் கொள்கையே விளக்கெண்ணைதானே!

## அங்கும் இங்கும்!

### உரைகல்

நமக்குப் பின்னல் சுதந்திரமடைந்த தேசம் சீனம்.

நம்மைவிட மிகவும் பிற்பட்டிருந்த தேசம் சீனம்.

அபினியுண்டு அந்தகாரத்தில் அமிழ்ந்து கிடந்த தேசம் சீனம்.

சியாங்கே ஷேக்கின் சீரழிவு ஆட்சியால் சிதைந்து சின்னபின்னமாகி இருந்த தேசம் சீனம்.

வெறும் சோற்றுக்கு வேற்றரிடம் கப்பறை ஏந்தி நின்ற தேசம் சீனம்.

அத்தகைய சீனம் இன்று நவசீனமாக மலர்ந்து நல்வாழ்வுப் பாதையிலே பீடு நோக்கோடு ஏறுநடை போட்டு முன்னேறிக் கொண்டிருக்கிறது.

குண்டூசி முதல் விமானம்வரை அத்தனைப் பொருள்களையும் தமது சொந்த மண்ணில், சொந்த உழைப்பில் உற்பத்திசெய்து பெருமையும் பெருமிதமும் கொள்கிறது.

இன்னும் பதினைந்து ஆண்டில் உருக்கு உற்பத்தியில் பிரிட்டனை மிஞ்சுகிறோம் பார் என்று தலை உயர்த்தி மார்பு தட்டிக்கொண்டிருக்கிறது.

உணவில் தனது தேவையையும் பூர்த்திசெய்து கொண்டு அன்ன விசாரம்கொண்ட நாடுகளுக்கு உணவு தான்யங்களை ஏற்றுமதிசெய்து உதவும் அளவுக்கு விவசாயம் அங்கு வளர்ந்தோங்கிவிட்டது.

அதே நேரம் நம் இந்தியாவின் நிலைஎன்ன? இரண்டும் ஐந்தாண்டு திட்டங்கள் தீட்டிய பிறகும், நாம் இன்னும் சின்னஞ்சிறு செக்கோஸ்லவேகியா உற்பத்தி செய்யும் அளவுக்குக்கூட உருக்கு உற்பத்தி செய்ய முடியாத நிலையிலிருக்கிறோம்!

உணவு உற்பத்தியிலோ 10 ஆண்டுகளுக்குப் பிறகும் இன்னும் பிறரை எதிர்பார்த்து அண்ணாந்து தொண்ணூந்து நிற்கும் பரிதாப நிலையிலிருககிறோம்.

இவ்விதம் சீனம் வெகு வேகத்தில் முன்னேறவும் நாம் இன்னும் நம் சொந்த உணவுப்பிரச்னையைக் கூடத் தீர்த்துக் கொள்ள முடியாதிருப்பதற்கும் காரணம் என்ன?

இதற்கு பல அடிப்படையான, முக்கியமான காரணங்களுண்டு. ஆயினும் ஒரே ஒரு முக்கிய காரணத்தை மட்டும் இங்குக் குறிப்பிட விரும்புகிறோம்.

எந்த ஆட்சியானலும் சரி, அதில் நிர்வாக யந்திரம் ஒரு மிக முக்கியமான அமைப்பு. இந்த யந்திரம் ஒட்டை உடைசலின்றி, பழுதின்றி, அழுக்கும் இழுக்குமின்றி, இயங்கினல்தான் அந்த நாட்டில் நல்லாட்சி நிலவமுடியும்; மக்களின் துன்ப துயரங்கள் தொலைய முடியும்; தேசத்தைவளம்கொழிக்கச் செய்யும் பிரம்மாண்டமானத் திட்டங்களை வெற்றிகரமாக நிறைவேற்றிவைக்க முடியும்.

இதனல்தான் சீனவிலே மக்கள் குடியரசு மலர்ந்ததும் இவ்விஷயத்தில் மிக அதிகமான சிரத்தை எடுத்துக்கொண்டார்கள். சியாங்கேஷேக் காலத்திலே பெரு நிலப்பிரபுக்களுக்கும், பணமூட்டைகளுக்கும் பாதம் தாங்கும் பல்லக்குத் தூக்கும் கொத்தடிமையாக இருந்த நிர்வாக யந்திரத்தை அடியோடு மாற்றி அமைத்து, மக்களுக்கும் நாட்டுக்கும் தன்னலமற்ற தொண்டுசெய்யும் யந்திரமாக மாற்றி அமைத்தார்கள்.

இதுவும் போதாது என்று விட்டக்குறை தொட்டக் குறையாக இந்த யந்திரத்திலே படிந்திருக்கக் கூடிய தூசு தும்புகளை அகற்றவும் இப்போது ஆரம்பித்திருக்கிருர்கள். அதுவும் மிகவும் புரட்சிகரமான முறையிலே சீனத்தவர்கள் இந்தக் காரியத்தைச் செய்துள்ளார்கள்.

அது எப்படி என்று கேட்கிறீர்களா? சீன நகரம், கிராமம் ஒவ்வொன்றிலும் மக்கள் பிரதிநிதிகளைக்கொண்ட தெருக் கமிட்டிகள் அமைக்கப்பட்டுள்ளன. இந்தக் கமிட்டியினர் ஒவ்வொரு தெருவிலும் ஒரு பொது இடத்தில் கூட்டம் கூட்டுவார்கள். இந்தக் கூட்டத்தில் வந்து அதிகாரிகள் செய்யும் ஊழல்களையும், ஊதாரித்தனங்களையும் பகிரங்கமாக ஜனங்கள் கூறலாம். இப்படிக் குற்றம் சாட்டும் எவர்மீதும் அதிகாரிகள் வஞ்சம் தீர்க்கமுடியாது. அதற்கான பாதுகாப்பை சர்க்கார் வழங்கியுள்ளது.

இதேபோல ஒவ்வொரு காரியாலயத்திலும் தொழிற்சாலையிலும் ஊழல் மனேபாவம் கொண்ட மேலதிகாரிகளின் அக்கிரமங்களை அங்கே கூட்டம்போட்டு ஊழியர்கள் பகிரங்கமாக தெரிவிக்கலாம். இதன்மீது சர்க்கார் நடவடிக்கை எடுத்து ஜன விரோதிகளான, ஊழல் ஊதாரித்தனங்கள் நிரம்பிய அதிகாரிகளைக் கைது செய்து காவலில் வைக்கும்.

இத்தகைய ஒரு இயக்கம் ஆரம்பமானதிலிருந்து நிர்வாக யந்திரத்தில் அந்துப் பூச்சிகள் போலிருந்த ஒன்றிரண்டு பெருச்சாளி பேர்வழிகளும்கூட இனி நம் ஜம்பம் சாயாது என்று திருந்தி வருகிருர்கள். இவ்விதம் சீனத்திலே நிர்வாக யந்திரம் நாளுக்கு நாள் புனிதப்படுத்தப்பட்டு சுத்தப்படுத்தப்பட்டு வருகிறது.

இதனல்தான் அங்கு போடும் எந்தத் திட்டத்தையும் நிர்வாக யந்திரம் பொது மக்களின், பாட்டாளிகளின் ஒத்துழைப்போடு குறிப்பிட்ட காலத்திற்கு முன்னரேயே வெற்றிகரமாக நிறைவேற்றி வருகிறது.

ஆனல் இதே சமயம் இந்தியாவில் நடப்பதென்ன? இங்கேயும் நிர்வாக யந்திரத்தை சுத்திகரிக்க வேண்டுமென்று காங்கிரஸ்காரர்களும் அவர்களது அரசாங்கங்களும் மந்திரம் ஜெபித்துதான் வருகின்றன. ஆனல் இந்த சுத்திகரிப்பு இந்தக்காருண்ய ஆட்சியில் எப்படி நடக்கிறது தெரியுமா? அதற்கு ஒரே ஒரு 'சாம்பிள்' கொடுக்கிறோம்:

டெல்லி ராஜ்ய மின்சார போர்டில் ஒரு பெரிய கையாடல் நடந்திருக்கிறது. இந்தத் திருவிளையாடலில் பெரிய பெரிய அதிகாரிகள் சம்பந்தப்பட்டிருக்கிருர்கள் என்று கேள்வி. இந்த ஒழுங்கீனத்தை நாட்டிற்கு நல்லது செய்கிறோம்என்று நினைத்துக்கொண்டு ஹர்மோகேந்திரசிங் என்னும் ஒரு குமஸ்தா கையும் மெய்யுமாக அம்பலப்படுத்திவிட்டார்.

வேறு தேசமாக, ரஷ்யாவாகவோ, சீனுவாகவோ இருந்தால் இந்த வாலிபருக்கு 'சோஷலிஸ வீரன்' என்ற பட்டம் கிடைத்திருக்கும். ஆனல் 2 லட்ச ரூபாய் மோசடியை அம்பலப்படுத்திய இந்த அப்பாவிக்கு இந்த நாட்டில் என்ன பரிசு கிடைத்திருக்கிறது தெரியுமா? அவரது பெரிய குடும்பத்தை இதுவரை அரைவயிறு, கால் வயிருக பசியாற்றிவந்த வேலை போய்விட்டது!

இப்போது தெரிகிறதா சீனம் ஏன் மின்னல் வேகத்தில் முன்னேறிக் கொண்டிருக்கிறது, இந்தியா ஏன் ஆமை வேகத்தில் நகர்ந்துகொண்டிருக்கிறதுஎன்று!

—மாஜினி

# ஆஸ்பத்திரி மருந்துகள் மருந்துக் கடைக்குப் போகிறது!

## சில டாக்டர்கள்மீது கேரள மந்திரி குற்றச் சாட்டுகள்

திருவனந்தபுரம், மார்ச். 21— சர்க்கார் ஆஸ்பத்திரிகளிலுள்ள விலை உயர்ந்த மருந்துகளை சில டாக்டர்கள் மருந்து வியாபாரிகளுக்கு கள்ளத்தனமாக விற்று வருகிறார்கள் என்று கூறப்படும் புகாரில் ஓரளவு உண்மை இருக்கிறது. இது சம்பந்தமாக சர்க்கார் தீவிர நடவடிக்கை மேற்கொண்டு வருகிறது என்று கேரள சுகாதார மந்திரி டாக்டர் ஏ. ஆர். மேனன் இன்று சட்டசபையில் தெரிவித்தார்.

அவர் மேலும் கூறியதாவது: "இதுமட்டுமல்ல. பொது ஸ்தாபனங்கள் என்று சொல்லிக்கொள்ளும் சில 'தர்ம' ஸ்தாபனங்கள் கூட இதுபோன்ற முறையற்ற செயல்களில் இறங்கியுள்ளன. அதாவது ஏழைகளுக்கு வினியோகிக்க அமெரிக்கா தரும் பால் பவுடரை அப்படியே டின் டின்னாக விற்றுவிடுகின்றன. இந்த ஸ்தாபனங்களின் பெயர்களை இங்கே வெளியிட நான் விரும்பவில்லை. எனினும் எதிர்க்கட்சிகள் ஆதரிக்குமானால் இத்தகைய ஸ்தாபனங்கள்மீது நீதிமன்ற நடவடிக்கைகள் எடுக்க முடியும்" என்று கூறினார்.

## தார் கம்பெனி முதலாளியின் அத்து மீறிய செயல்

### சங்க ஊழியர்கள் தாக்கப்பட்டனர்

சென்னை, மார்ச் 21— சென்னை தார் கம்பெனி முதலாளிக்கும் தொழிலாளர்களுக்கும் இடையிலுள்ள தகராறில் மார்ச் 24-ந் தேதியன்று லேபர் ஆபீஸர் முன் பேச்சு வார்த்தை நடக்க இருக்கும் இத்தருணத்தில், மேற்படி கம்பெனியின் முதலாளி தொழிற்சங்க ஊழியர்கள் மீது தாக்குதல் தொடுத்துள்ளார் என்று கூறப்படுகிறது 19-3-'58 அன்று மாலை 5-மணிக்கு வேலை முடிந்து வீடு திரும்பும்போது தொழிற்சங்க ஊழியர் எம். குப்பன் என்பவர் சில கருங்காலிகளால் பலமாகத் தாக்கப்பட்டாராம். முதலாளியின் தூண்டுதலே இதற்குக் காரணமாம். போலீஸ் தலையிட்டு, கேஸ் நடத்தி, தாக்கியவர்கள் 6 பேருக்கும் கோர்ட்டில் தலா ரூ. 2. அபராதமும் விதிக்கப்பட்டது.

## விற்பனை வரி திருத்த மசோதா

### கும்பகோணம் வர்த்தகர் சங்க விண்ணப்பம்

கும்பகோணம், மார்ச் 20— கும்பகோணம் நகர வர்த்தகர் சங்க நிர்வாகக் கமிட்டிக் கூட்டம் மார்ச் 16-ம் தேதி நடைபெற்றது. அப்போது சென்னை பொது விற்பனை வரி திருத்த மசோதாவை பரிசீலிக்கும் பொறுக்குக் கமிட்டியினரின் கவனத்திற்கு ஒரு விண்ணப்பம் அனுப்புவதென்று தீர்மானிக்கப்பட்டது. விற்பனை வரி விலக்கு வரம்பை குறைந்தபட்சம் ரூ. 25 ஆயிரத்துக்கு உயர்த்தி நிர்ணயிக்க வேண்டும் என்றும், கோதுமை, நெல், அரிசி, பால் ஆகியவற்றிற்கும் காய்கறி, பழம், வெற்றிலை, வாழை இலை, புஷ்பம், முட்டை இறைச்சி, மீன் முதலியவற்றைப் போலவே விற்பனை வரிவிலக்கு வரம்பு ரூ. 25 ஆயிரம் என நிர்ணயிக்க வேண்டும் என்றும், ரிஜிஸ்ட்ரேஷனுக்குரிய வருட விற்பனை ரூ 10 ஆயிரம் என நிர்ணயிக்க வேண்டும் என்றும், வருட விற்பனை 10 ஆயிரத்துக்கு மேல் 25 ஆயிரத்துக்குட்பட்ட வர்த்தகர்களுக்கு 'காம்பவுண்டட்' முறையில் மாதம் 1-க்கு ரூ. 10 என விற்பனை வரி விதிக்கலாம் என்றும், நிர்வாக அதிகாரிகளுக்கு அதிக அதிகாரம் வழங்கப்பட்டிருப்பது சரியல்லவென்றும் இந்த விண்ணப்பத்தில் எடுத்துக்காட்டப்பட்டுள்ளது.

## ஆயுள் இன்ஷூரன்ஸ் கார்ப்பொரேஷனுக்குப் புதிய தலைவர்

புதுடில்லி, மார்ச் 23— தற்பொழுது யூனியன் மந்திரி சபையின் செக்ரடேரியட்டில் கூட்டுக் காரியதரிசியாகவுள்ள பி. ஏ. கோபால கிருஷ்ணன் (ஐ. சி. எஸ்.) என்பவர் ஆயுள் இன்ஷூரன்ஸ் கார்ப்பொரேஷனின் தலைவராக நியமிக்கப்படலாம், என்று தெரிகிறது. ஏற்கனவே இதன் தலைவராயிருந்த காமத் என்பவர் ஒரு விசாரணைக் கமிட்டியின் விசாரணைக்கு உட்பட்டுள்ளார் என்பது தெரிந்ததே.

## பல்கேரியாவில் இந்தியக் கலைக் காட்சி

புதுடெல்லி, மார்ச் 22— இந்திய கிராமியக் கலைப் பொருள் காட்சி ஒன்று பல்கேரியத் தலைநகரான சோபியாவில் நடைபெறுகிறது. கிராமிய நடனங்கள் உள்ளிட்ட பல அம்சங்கள் இக்காட்சியில் வைக்கப்பட்டுள்ளன.

## காளி—காளை மார்க்

### சோடா கம்பெனி வழக்கு தொழிலாளர் வெற்றி

மதுரை, மார்ச் 20— மதுரை, விருதுநகர் முதலிய இடங்களில் சோடா, கலர் வகையறா தயாரித்து விற்பனை செய்து வரும் காளி மார்க் சோடா கம்பெனியின் மதுரைக் கிளையில் வேலை செய்துவந்த நடராஜன் முதலிய 30 தொழிலாளர்களை நஷ்டஈடு கொடுக்காமல் 1956-ல் விலக்கியது தெரிந்ததே. இப்படி விலக்கப்பட்ட தொழிலாளர்கள் ஒன்று சேர்ந்து கூட்டுறவு முறையில் காளை மார்க் என்ற பெயரால் சென்ற 1957 பிப்ரவரி முதல் ஒரு சோடா கம்பெனி நடத்தி வந்தார்கள். இதைக் கண்ட காளி மார்க் கம்பெனியார் "காளை மார்க்" என்ற விலாசத்துடன் சோடா கம்பெனி நடத்தக் கூடாது என்று நிரந்தர தடை விதிக்கும்படி வேண்டி மதுரை ஜில்லா கோர்ட்டில் ஒரு வழக்கு கொடுத்திருந்தனர். இதனை விசாரித்த மதுரை ஜில்லா கோர்ட் நீதிபதி திரு. ஆர். சௌந்தர ராஜன் காளி மார்க் கம்பெனியால் கோரிக்கையை நிராகரித்து வழக்கை தள்ளுபடி செய்து தீர்ப்பளித்தார்.

காளி மார்க் கம்பெனி சார்பில் வழக்கறிஞர்கள் கே. சேதுராமன், ஆர். கோவிந்தராஜன் ஆகியோர் ஆஜராகியிருந்தனர்.

# சென்னை மாநிலத் தமிழாசிரியர் மாநாடு

## கோவையில் ஏப்ரல் மாதம் 26, 27ந்தேதிகளில் நடைபெறுகிறது

கோவை, மார்ச் 14— சென்னை மாநிலத் தமிழாசிரியர் நான்காவது மாநாடு ஏப்ரல் திங்கள் 26, 27-ஆம் நாட்களில் கோயம்புத்தூரில் நடைபெறும். தற்போது, தமிழ், சென்னை மாநிலத்தின் அரசியல் மொழியாக மேற்கொள்ளப்பட்டு இருப்பதால் தமிழ் ஆசிரியர்களின் பொறுப்பு வளர்ந்துள்ளது. இது குறித்தும் மற்றும் தமிழ் ஆசிரியர்களைத் தற்போது எதிர்நோக்கியுள்ள சிக்கல்களைப் பற்றியும் ஆராயப்படும். மேலும், அரசியல் துறைக்கும் வேறு துறைகட்கும் ஏற்பத் தமிழ் மொழியை எப்படி வளப்படுத்துவது என்பதையும், வேறு பல செய்திகளையும் பற்றி மாநாடு ஆராயும். இன்றைய சூழ்நிலையில் இத்தகைய மாநாடு மிகவும் நன்மை பயப்பதொன்று என்பதைக் கூற வேண்டியதில்லை. இம் மாநாடு வெற்றிபெற தமிழாசிரியரும், பொது மக்களும் தங்கள் ஒத்துழைப்பை நல்கவேண்டுமென்று கேட்டுக்கொள்ளப்படுகிறார்கள்.

### மாநாடு சிறப்புற நடத்த குழு அமைப்பு

மாநாட்டினை வெற்றிகரமாக நடத்த திருவாளர்கள் ஜி. ஆர். தாமோதரனை தலைவராகவும், வி. சி. சுப்பையா கவுண்டர், நா. மகாலிங்கம், பி. எஸ். ஜி. ஜி. கோவிந்தசாமி ஆகியோர்களைத் துணைத் தலைவர்களாகவும், புலவர் தா. ஏ ஞானமூர்த்தியை செயலாளராகவும், புலவர் நா. துரைசாமி, புலவர் நா. சுந்தரராசன் ஆகியோரை துணைச் செயலாளர்களாகவும், புலவர் பெ. இராமச்சந்திரனை பொருளாளராகவும் கொண்ட ஒரு வரவேற்புக் குழு அமைக்கப்பட்டுள்ளது. வரவேற்புக் குழு அலுவலகம்: கலைக்கதிர் அகம், 6/256-B, அவிநாசி சாலை, கோவை.

## அணு சோதனைகளை தானகவே ரஷ்யா நிறுத்தலாமென்று

### அமெரிக்க வட்டாரம் கருத்து

வாஷிங்டன், மார்ச். 23— சோவியத் அரசாங்கம் தானே முன்கையெடுத்து முதலில் அணு ஆயுத சோதனைகளை நிறுத்துவதாக அறிவிக்கலாம் என்று அமெரிக்கத் தலைநகரில் இன்று ஹேஷ்யங்கள் உலாவின.

அணு ஆயுதங்களை உற்பத்தி செய்வதையே நிறுத்தி வைக்கும் அளவுக்கு சோவியத் யூனியன் செல்லலாம் என்றும் இதர தகவல்கள் கூறின.

இந்தத் தகவல்களுக்கெல்லாம் அதிகாரபூர்வமான ஊர்ஜிதம் கிடைக்கா விட்டாலுமகூட, இவற்றை அமெரிக்க அரசாங்கம் கவனத்திலெடுத்துக் கொண்டுள்ளது.

இவ்வாறு சோவியத் யூனியன் பிரகடனப்படுத்துமேயானால், நடுநிலைக்கொள்கை நாடுகளிடையே அமெரிக்காவின் செல்வாக்கு மிகவும் பாதகமடையும் என்றும், சோவியத் செல்வாக்கு உயருமென்றும் கருதப்படுகிறது.

## திட்ட வேலைகளை நிறைவேற்ற

### விஞ்ஞானிகள் வாக்குறுதி

சல்கத்தா, மார்ச் 22— ஐந்தாண்டுத் திட்ட வேலைகளை நிறைவேற்றுவதற்கு உறு துணையாக சர்க்காருக்கு சகல உதவிகளையும் செய்வதாக தேசிய விஞ்ஞான கழகத்தைச் சேர்ந்த விஞ்ஞானிகள் வாக்குறுதியளித்துள்ளனர். இவ்வாறு தமது சேவைகளை அளிப்பதாக உறுதி கூறி ஒரு தீர்மானம் கழகக் கூட்டத்தில் நிறைவேற்றப்பட்டது. பேராசிரியர் மஹலநோபிஸ் தலைமை வகித்தார். விஞ்ஞானிகள் பற்றிய பிரதமரின் அறிக்கை அங்கீகரிக்கப்பட்டது.

# மார்ச் 27: கோரிக்கை தினம்

## கொண்டாட முஸ்தீபுகள்

### திருச்சி

மார்ச் 27-ந் தேதியைத் தொழிலாளர் கோரிக்கை தினமாகக் கொண்டாடவேண்டுமென்ற அ. இ. தொ. ச. காங்கிரசின் அறைகூவலுக்கேற்ப திருச்சியில் அந்த தினத்தைச் சிறப்பான முறையில் நடத்துவதற்கு 15-3-58 அன்று ரயில்வே எம்ப்ளாயீஸ் யூனியன் ஆபீசில் தொழிற் சங்கக் காரியதரிசிகள் கூட்டம் நடைபெற்றது. கோரிக்கை தின ஏற்பாடுகளைச் செய்வதற்கு ஒரு செயற்குழு அமைக்கப்பட்டது.

திருச்சி ஜங்ஷனிலிருந்து 27-ந் தேதி மாலை ஒரு ஊர்வலம் புறப்பட்டு டவுன் ஹால் மைதானம் வந்தடையும்.

சகல மத்திய மாகாண தொழிற் சங்கங்களின் பிரதிநிதிகளும் பொதுக்கூட்டத்தில் பேசுவார்கள்.

### விழுப்புரம்

19-3-58 அன்று ரயில்வே லேபர் யூனியன் காரியாலயத்தில் ரயில்வே, மோட்டார், ஓட்டல் முதலிய தொழிற்சங்கப் பிரதிநிதிகள் கூடினர். தோழர் இ. டி. வேலாயுதம் பிள்ளை தலைமை வகித்து, மார்ச் 27 கோரிக்கை தின முக்கியத்துவம் பற்றி விளக்கினார்.

தோழர் எஸ். பத்மநாபன் 14 அம்ச கோரிக்கை சாசனத்தைப் படித்து விளக்கினார்.

பல தொழிற்சங்கங்கள் சார்பில் தோழர்கள் ஆர். முருகேசன், ராமனுதன், நாராயணசாமி ஆகியோரும் பேசியபின், வி. கண்ணபிரானை கன்வீனராகக் கொண்ட ஒரு நடவடிக்கைக் கமிட்டி ஏற்படுத்தப்பட்டது.

### குடியாத்தம்

டெக்ஸ்டைல் லேபர் யூனியன் அலுவலகத்தில் தோழர் டி. வி. கொண்டப்பா தலைமையில் 20-3-58 அன்று நடைபெற்ற தொழிற்சங்கப் பிரதிநிதிகள் கூட்டத்தில். டாக்டர் ஜி கண்ணபிரான், கோரிக்கை தினத்தின் முக்யத்துவம் பற்றிப் பேசிய பின், மார்ச் 27 அன்று பெரிய ஊர்வலமும், பொதுக்கூட்டமும் நடத்துவதென்று முடிவு செய்யப்பட்டது. கைத்தறி, பஞ்சாலை, முனிசிபல் அண்டு பஞ்சாயத்து போர்டு தொழிலாளர், தீப்பெட்டி, பீடி, சலவை, மின்சாரத் தொழிலாளர் சங்கங்களின் பிரதிநிதிகள் கலந்து கொண்டனர்.

### புதுக்கோட்டை

17-3-58 அன்று ஓட்டல் தொழிலாளர் சங்கத் தலைவர் திரு. தி. சி. பொன்னன் தலைமையில் நடைபெற்ற ஓட்டல் தொழிலாளர் சங்க பேரவைக் கூட்டத்தில் கோரிக்கை தினத்தைக் கொண்டாடுவது பற்றி தலைவர் விளக்கினார்.

பல தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன.

# தமிழ்நாடு முனிசிபல், பஞ்சாயத்து தொழிலாளர் மகாநாடு

## திருச்சியில் நடத்த ஏற்பாடுகள்

திருச்சி, மார்ச் 21— தமிழ்நாடு முனிசிபல், பஞ்சாயத்து தொழிலாளர் 2-வது மகாநாட்டை திருச்சியில் ஏப்ரல் 26, 27 தேதிகளில் நடத்துவதென்று மார்ச் 15-ம் தேதி இங்கு நடைபெற்ற தொழிற்சங்க முக்கியஸ்தர்கள் கூட்டத்தில் முடிவு எடுக்கப்பட்டது. மகாநாட்டை வெற்றிகரமாகவும் சிறப்பாகவும் நடத்த 32 பேர்கள் கொண்ட ஒரு வரவேற்புக் கமிட்டி அமைக்கப்பட்டது. கமிட்டிக்கு ஆர். லட்சுமணன் தலைவராகவும், வி. ராஜகோபால் செயலாளராகவும், எம். அந்தோணி பொருளாளராகவும் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

### தலைவர்களை மாநாட்டுக்கு அழைப்பதென்று தீர்மானிக்கப்பட்டது

மகாநாட்டிற்கு கேரளதொழில் மந்திரி கே. பி கோபாலன், டி. பி. விட்டல்ராவ் எம் பி., டி. சி என். மேனன் எம்.பி., கே.டி கே. தங்கமணி எம்.பி., எம். கல்யாணசுந்தரம் எம்.எல்.ஏ., வி.கே.கோதண்டராமன் எம். எல். ஏ., பி. ராமமூர்த்தி, ப. ஜீவானந்தம், மணலி கந்தசாமி, கே. ஏ. சாரி, கே பி. ஜானகி ஆகியோரை அழைப்பதென்று தீர்மானிக்கப்பட்டது. மகாநாடு சம்பந்தமாகபின்கண்ட முகவரிக்குக் கடிதப் போக்குவரத்துகள் வைத்துக் கொள்ளலாம் என்று கேட்டுக் கொள்ளப்படுகிறது. ஆர். லட்சுமணன், தலைவர், வரவேற்புக் கமிட்டி, தமிழ் நாடு முனிசிபல், பஞ்சாயத்தொழிலாளர் 2-வது மகாநாடு, 116, சாலை ரோடு, உறையூர், திருச்சி-3.

## இந்தூருக்கு காங்கிரஸ் அல்லாத மேயர்!

இந்தூர், மார்ச் 22— இந்தூருக்கு கடந்த 19 வருஷங்களாக காங்கிரஸ் கட்சியைச் சேர்ந்தவர்களே மேயராகஇருந்து வந்திருக்கிறார்கள். ஆனால் சமீபத்தில் நடைபெற்றதேர்தலில் கம்யூனிஸ்ட் தலைமையில் உள்ள நகர் சமிதி பெரும்பான்மையான இடங்களைக் கைப்பற்றியதைத் தொடர்ந்து சமிதியைச் சேர்ந்த புருஷோத்தம விஜய் மேயராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார்.

## 'தேவகன்னிகை' 3000 அடி சென்று கீழே இறங்கினாள்

### நாட்டு வெடிக் கலைஞர் சாதனை!

மகாதேவிக்காடு, மார்ச் 17— கேரளத்தில் நடைபெற்ற பல திருவிழாக் காலங்களில் ஒரு நாய்க் குட்டியை அவுட்டு வெடி மூலம் மேலே செல்லவிட்டு பாரசூட் மூலம் கீழே இறக்கும் சோதனைகளை நடத்த வந்தார் ஒரு நாட்டு வெடிக் கலைஞர். அவர் அண்மையில் 'தேவகன்னிகை' என்ற பெயருள்ள நாயை இவ்வாறு அவுட்டு வெடி மூலம் 3000 அடி உயரம் அனுப்பி பாரசூட் மூலம் இறங்கச் செய்தார். நாய்க்கு எவ்வித ஆபத்தும் ஏற்படவில்லை. அவர் பேர் குஞ்சு கிருஷ்ணன் என்பதாகும்.

## பிரபல சினிமா படத் தயாரிப்பாளர்

### விமான விபத்தில் மரணம்

நியூமெக்ஸிகோ, மார்ச் 22— உலகப் பிரசித்திபெற்ற சினிமா படத்தயாரிப்பாளரான மைக் டாட் இன்று ஒருவிமான விபத்தில் காலமானார். "80 நாட்களில் உலகத்தைச் சுற்றி" என்னும் புகழ்பெற்ற படத்தைத் தயாரித்தவர் இவர். பிரபல பிரிட்டிஷ் நடிகையான எலிசபெத் டெய்லர் இவரது மனைவியாகும். இருவரும் வெகு அண்மையில்தான் ரஷ்யாவுக்கு சென்றுவந்தனர். ரஷ்யாவுடன் இதர நாடுகள் கலாச்சார உறவு கொள்வது அவசியம் என்பதை டாட் வற்புறுத்தியது இங்கு நினைவிற்குரியது.

## நடக்க இருப்பவை

### வடசென்னையில் எம். ஆர். வி. ரிப்போர்ட் செய்வார்

26-3-58 புதன் இரவு 7 மணிக்கு வடசென்னை ஏரியாவிலுள்ள கட்சி அங்கத்தினர்கள் கூட்டம் 1-வது வட்டக்கிளை அலுவலகமான சிங்காரவேலர் மன்றத்தில் நடைபெறும். தோழர் எம். ஆர். வெங்கட்ராமன் "வெகுஜன கம்யூனிஸ்ட் கட்சியும் அங்கத்தினர் கடமைகளும்" என்பதுபற்றி ரிப்போர்ட் செய்வார். கட்சி கார்டு கொண்டு வருக.

செயலாளர், வடசென்னை ஏரியா கமிட்டி.

# விவசாயிகளை வெளியேற்ற கொலைகாரர்கள் தயாரிப்பு!

## அவர்கள் பாதுகாப்பிற்கு இன்ஷூரன்ஸ் வேறு!

### கோவிந்தன் நாயர் வெளியிடும் திடுக்கிடும் தகவல்

கொல்லம், மார்ச் 21—
கேரள ராஜ்ய கம்யூனிஸ்ட் கட்சி செயலாளர் எம். என். கோவிந்தன் நாயர் எம். பி இங்கு கட்சிக்கிளை ஒன்றை ஆரம்பித்து வைத்துப் பேசினார். அப்போது அவர் கூறியதாவது:

"கம்யூனிஸ் கட்சியைப் பதவிக்குக் கொண்டுவந்ததோடு தங்கள் கடமை தீர்ந்துவிட்டதாக தொழிலாளர்களும், உழைப்பாளர்களும் கருதுகின்றனர். இந்த மனோபாவம் மாறியாக வேண்டும். மாறவில்லையானால் அவர்களுக்கு மட்டுமல்ல; ராஜ்யமே ஆபத்திற்குள்ளாகிவிடும்.

#### துப்பாக்கி மூலம் கிறிஸ்துவ சேவையா ?

நிலச் சீர்திருத்த மசோதா விவசாயிகளின் நன்மதிப்பைப் பெற்று வருகிறது. இந்த மசோதா சட்டமாவதற்கு முன், விவசாயிகளை நிலத்திலிருந்து வெளியேற்ற பிற்போக்காளர்கள் முயற்சிக்கின்றனர். அதற்காக அவர்கள் துப்பாக்கித் தாங்கவும் தயாராகிவிட்டார்கள்

கிறிஸ்துவ மத திரைக்குப்பின் கோட்டயம் ஜில்லாவில் 'கிறிஸ்டோபர்கள்' கட்டாரி, துப்பாக்கிகளுடன் அட்டூழியங்கள் செய்து வருகிறார்கள். கத்தோலிக்க பள்ளிகளின் தலைமையில் இவர்கள் பலாத்கார நடவடிக்கைகளில் ஈடுபட்டிருக்கின்றனர்.

கிறிஸ்துவின் கொள்கைகளை பரப்பினால் எல்லோரும் மகிழ்ச்சி அடைவர். ஆனால் அதற்காக கட்டாரி, துப்பாக்கி முதலியன தேவையா ?

#### பனை மரங்கள் வெட்டப்படுகின்றன

மதுவிலக்கின் பெயரால் பனை மரங்களை 'கிறிஸ்டோபர்கள்' வெட்டிக் கள்ளுக்கடைகள் மூன் கொண்டு விற்கின்றனர். இதன் நோக்கம் கள் இறக்கும் தொழிலாளர்களுக்கு வேலையில்லாத தாக்குவதும், சர்க்காரின் கலால் வருமானத்தை நஷ்டமாக்குவதும் தான்.

#### கொல்லும் படை

கருநாகப் பள்ளியில் 'கொல்லும் படைகள்' தயார் செய்யப்பட்டிருக்கிறது. இவர்களது வேலை நிலத்திலிருந்து விவசாயிகளை வெளியேற்றுவதுதான் விவசாயிகளைக் கொலை செய்வது இவர்களுக்கு இடப்பட்டுள்ள பணி. இந்தக் கொலையாளிகளின் பாதுகாப்பிற்காக ஆயுள் இன்ஷூரன்ஸ்கூட செய்யப்பட்டிருக்கிறது!'

இவ்விதம் கோவிந்தன் நாயர் பேசினார்.

## 2 வருடத்தில் 6 தடவை கட்சி மாறினர்

### பாகிஸ்தான் அரசியல் விநோதம்

கராச்சி, மார்ச். 23—
2 வருடத்தில் 6 தடவை கட்சி மாறி மேற்கு பாகிஸ்தான் சட்டசபை உறுப்பினர் அல்துல்கரீம் என்பவர் 'உலக ரிக்கார்ட்' ஏற்படுத்திவிட்டார்! சென்ற வெள்ளிக்கிழமை முஸ்லீம் லீக்கிலிருந்து குடியரசு கட்சிக்கு மாறினார். இது அவரது ஆறுவது கட்சி மாற்றம். எந்தக் கட்சிக்கு ஒரு குறிப்பிட்ட கட்டத்தில் பலம் அதிகம் இருக்கிறதோ அந்தக் கட்சியில் அவர் அப்போது சேர்ந்து விடுவாராம்.

## லாரி ட்ரைவருக்கு ரூ. 175 நஷ்டஈடு

பெரம்பலூர், மார்ச் 20—
பெரம்பலூர் மீனாட்சி லாரி சர்வீஸில் ட்ரைவராக வேலை பார்த்து வந்த வி. சுந்தரராஜுவை, மேற்படி சர்வீஸ் உரிமையாளர் திடீரென்று வேலையைவிட்டு நீக்கிவிட்டார்.

பெரம்பலூர்தாலூகா பொதுத் தொழிலாளர் சங்கத்தின் தலையீட்டின் பேரில் அரியலூர் உதவி லேபர் இன்ஸ்பெக்டர் 13-3-58ல் சமரஸம் செய்து வைத்தார். லாரி ட்ரைவருக்கு ரூ. 175 நஷ்டஈடு கிடைத்தது.

## கொடிக்கால் நிலங்களுக்குப் பாதுகாப்பு

சென்னை, மார்ச். 2—
தமிழ்நாடு கொடிக்கால் விவசாயிகள் சம்மேளனத்தின் நடவடிக்கைக் கமிட்டிக் கூட்டம் மந்திரிகளைப் பேட்டி கண்டது பற்றி விவாதித்தது. கொடிக்கால் சாகுபடி நிலங்களுக்குப் பாதுகாப்புச் சட்டப்படி பாதுகாப்பு அளிக்கும்படியும், கடனுதவி அளிக்கக் கோரியும் தீர்மானிக்கப்பட்டது.

# கூலி குறைவாகக் கொடுக்க அதிகாரி செய்த தில்லுமுல்லு

## ஹார்பரில் வேலை நிறுத்தம்

சென்னை, மார்ச். 21—
சென்னைத் துறைமுகத்தில், ஏற்றுமதி இறக்குமதியில் ஈடுபட்டிருக்கும் தொழிலாளருக்கு, 'செய்த வேலைக்குத் தக்க கூலி' என்ற பீஸ்ரேட் முறை அமுலுக்குக் கொண்டுவர வேண்டுமென்று மதராஸ் ஹார்பர் தொழிலாளர் சங்கம் வெகு பிரயாசைப் பட்டு வெற்றியடைந்தது.

இந்த வெற்றியை நடைமுறையில் தொழிலாளர்கள் அனுபவிக்க முடியாதபடி பல கம்பெனிக்காரர்கள் முயற்சி செய்கிறார்கள்.

உதாரணமாக 20-3-58-ல் அமோனியம் உரத்தை சென்னையில் இறக்குமதி செய்ய டிமிரியாஜோவ் என்ற ரஷ்யக் கப்பல் வந்தது. இறக்குமதி வேலைக்கு 60 தொழிலாளர்கள் அனுப்பப்பட்டனர். பெஸ்ட் கம்பெனியார், தொழிலாளருக்கு குறைந்த கூலி கொடுக்க ஒரு தந்திரம் செய்தார்கள். உரத்தைக் கோணியில் நிரப்பி ஷில்லிங்கில் மாட்டிவிடும்படியாகக் கூறினார்கள். இதனால் போடவேண்டிய டேடம் லைனுக்கு போட முடியாமல் கூலி குறைவாக வரும் என அவர்கள் கருத்து. இதைத் தொழிலாளர்கள் எதிர்த்தனர். உரத்தை சவலால் தள்ளி சிக்கத்தில் போட்டு, ஹூக்கில் மாட்டிவிடுவோம் என ஸ்டீவ் டோர் தொழிலாளர்கள் கூறினார்கள். கம்பெனியார் மறுக்கவே, காலை 6-30 முதல் 11-15 மணி வரை வேலை நிறுத்தம் செய்தார்கள்.

ஹார்பர் தொழிலாளர் சங்கம் தலையிடவே, அதிகாரிகள் பணிந்தார்கள்.

## மாண்டலே சிறையில் திலகர் நினைவு மண்டபம்

புதுடெல்லி, மார்ச். 22—
தேச விடுதலைப் போராட்டத்தில் முன்னணியில் நின்ற காரணத்தால் நாடுகடத்தப்பெற்று மாண்டலே (பர்மா) சிறையில் அடைக்கப்பட்டார் லோகமான்ய பால கங்காதர திலகர். அந்தச் சிறையில் அவரது நினைவாக ஒரு மண்டபம் எழுப்பப்படுகிறது.

இம்மண்டபத்தின் வேலைகள் ஜூன் மாதத்திற்குள் பூர்த்தியாகிவிடும் என்று மக்கள் சபையில் வெளிவிவகார இலாகா காரியதரிசி சாதத் அலிகான் கூறினார்.

# தஞ்சை ஜில்லாவில் புரட்சி வரும்

## நிலைமை ஆவேசமாக மாறுகிறது

## நிலம் கொடுங்கள்! கூலி நிர்ணயம் செய்க!

### ஹரிஜன காங்கிரஸ் எம். எல். ஏ. திரு. முத்துக்குமாரசாமி எச்சரிக்கை

சென்னை, மார்ச் 24—
காங்கிரஸ் ஹரிஜன உறுப்பினர் திரு. முத்துக்குமாரசாமி ஹரிஜன மான்யத்தின் மீது நேற்று சட்டசபையில் பேசுகையில் குறிப்பிட்டதாவது: "இன்றையதஞ்சை ஜில்லா எப்படி இருக்கிறது என்பதை இந்த அமைச்சரவை உணர வேண்டும். இன்று அங்கு நிலைமை கொந்தளிப்பாக இருக்கிறது. வருடம் முழுவதும் உழைத்துவிட்டு ஓடாய்த் தேய்ந்த விவசாயத் தொழிலாளிகள் பட்டினியும் பசியுமாய்க் கிடக்கிறார்கள். அவர்களுக்கு வீடுகட்டிக் கொள்ளவும் சொந்த நிலமில்லை. உழுவதற்கும் சொந்த நிலமில்லை. குத்தகை வாரத்துக்கு சாகுபடி செய்துவந்தவர்களும் நிலத்திலிருந்து வெளியேற்றப்பட்டிருக்கிறார்கள். கூலி வேலை செய்யும் விவசாயத் தொழிலாளர்களுக்கோ கால்வயிறு அரைவயிற்றுக்குக் கூடப் போதாத கூலிதான் தரப்படுகிறது.

#### புரட்சி வரும்

ஆகவே, சர்க்காருக்கு எச்சரிக்கிறேன். நிலைமை மேலும் மோசமாவதற்குள் நிலமில்லாதவர்களுக்கு நிலம் கிடைக்க ஏற்பாடு செய்யுங்கள். விவசாயத் தொழிலாளிகளுக்கு கூலி நிர்ணயச் சட்டம் கொண்டு வாருங்கள்! தாமதம் செய்ய வேண்டாம். தஞ்சை ஜில்லா நிலைமை முன்போல் இல்லை. வெகு வேகமாக, ஆவேசமாக நிலைமை மாறிவருகிறது. தாமதம் செய்தால் புரட்சி வரும் என்று எச்சரிக்கிறேன்" என்றார்.

## வேலுத் தம்பியின் வீர வாள்

### தேசியப் பொருட் காட்சி சாலையில் வைக்கப்பட்டுள்ளது

திருவனந்தபுரம், மார்ச் 21—
பிரிட்டிஷ் ஆதிக்கவெறியர்களை எதிர்த்து வீரப் போர் விளைத்த தளபதி வேலுத்தம்பியின் வீர வாள் தேசிய பொருட்காட்சிசாலையில் வைக்கப்பட்டுள்ளது என்று மத்திய கல்வி அமைச்சர் தகவல் வெளியிட்டுள்ளார்.

இந்த வாள் 1957 ஆகஸ்ட் மாதம் ஜனாதிபதி கேரளத்திற்கு விஜயம் செய்தபோது அவரிடம் சமர்ப்பிக்கப்பட்டது.

## நான்குநேரி தாசில்தாரின் உதாசீனம்

### ரசீது பெறுவதில் விவசாயிகளின் தொல்லை

நான்குநேரி, மார்ச் 10—
நான்குநேரி தாலுக்கா தளபதி சமுத்திரம் கிராமத்தில் 250 ஏக்கர் நிலத்தில் சுமார் 200 விவசாயிகள் பாட்டத்திற்கு பயிரிட்டு வருகிறார்கள். இந்த வருடம் மேனித் தாழ்வாக இருப்பதால் விவசாயிகள் 60-40 சட்டப்படி வாரம் பிரிக்கவும், அளந்த நெல்லுக்கு ரசீதும், முத்திரை மரக்கால் கொண்டு பாட்ட நெல் அளக்க வேண்டும் என்றும் கோரிக்கையைத் தந்தார்கள். ஆனால் நிலச்சுவான்தார்கள் ரசீது தர கண்டிப்பாய் மறுத்துவிட்டார்கள். இந்நிலையில் சட்டப்படி அவர்கள் மீது நடவடிக்கை எடுக்கும்படி தாசில்தாரிடம் பலமுறை போய் கூறியும் ஸ்தலத்திற்கு வந்து பிரச்சினையைத் தீர்க்கவில்லை. இதேபோல துவரைகுளம் கிராமத்திலும் ரசீது கொடுக்க மறுக்கும் நிலச்சுவான்தார்கள் மீது நடவடிக்கை எடுப்பது சம்பந்தமாக உதவி தாசில்தாரை அனுப்புகிறேன் என்று சொல்லி இதுவரை அனுப்பவில்லை. இதனால் விவசாயிகள் இன்று சொல்லமுடியாத கஷ்டம் அனுபவித்து வருகிறார்கள்.

# சுப்ரீம் நீதிமன்ற முடிவு கோடீஸ்வரர்களுக்கு கும்மாளம்

## உழைக்கும் பத்திரிகையாளர்களுக்கு ஆதரவுகாட்ட டாங்கே வேண்டுகோள்

புதுடில்லி, மார்ச் 21—
உழைக்கும் பத்திரிகையாளர்களின் உரிமைப் போராட்டத்திற்கு ஆதரவாக தொழிற்சங்க இயக்கம்—தொழிலாளர் சங்கங்கள் முன்வரவேண்டும் என்று அ. இ. தொ. ச காங்கிரஸ் பொதுச் செயலாளர் எஸ். ஏ டாங்கே எம். பி. அறைகூவல் விடுத்துள்ளார்.

உழைக்கும் பத்திரிகையாளர் சம்பள போர்டு முடிவுகளை சட்ட விரோதம் என்று தீர்ப்பளித்துள்ள சுப்ரீம் நீதி மன்றத்தின் முடிவு உழைக்கும் பத்திரிகையாளர்களை எதிர்த்து நடத்தும் தாக்குதல் மட்டுமல்ல, இதர தொழில்களில் ஈடுபட்டுள்ள தொழிலாளர்களையும் பாதிப்பதாகும் என்று அவர் குறிப்பிடுகிறார்.

ஊழியர்களின் நியாயமான கோரிக்கைகளுக்கு விரோதமாக வந்துள்ள இந்தத் தீர்ப்பு நாட்டிலுள்ள கோடீஸ்வரர்களுக்குச் சாதகமாக இருக்கிறது. தொழிற்சங்கங்களைப பொறுத்துள்ள சட்டங்கள் எல்லாவற்றையும் சுப்ரீம் நீதிமன்றத்தின் அதிகார வட்டத்தில் இருந்து எடுத்துவிட வேண்டும் என்று அதாவது—தொழிலாளர் நலவுரிமைச் சட்டங்களில் சுப்ரீம் கோர்ட் தலையிடக்கூடாது என்று அ. இ. தொ. ச. காங்கிரஸ் கிளர்ச்சி செய்து வருவது நியாயம் என்பது இந்த நிகழ்ச்சியிலிருந்து ஊர்ஜிதமாகிறது என்று அவர் சுட்டிக்காட்டினார்.

# பரோடா நகர சபைத் தேர்தலில் காங்கிரஸ் படுதோல்வி

## மஹாகுஜரத் ஜனதா பரிஷத் வெற்றி

பரோடா, மார்ச் 20—
பரோடா நகரசபையில் 45 ஸ்தானங்கள் உள்ளன. இவற்றுக்கு நடைபெற்ற தேர்தலில் மஹாகுஜரத் ஜனதா பரிஷத் 23 ஸ்தானங்களைப்பெற்று வெற்றி முரசு கொட்டியுள்ளது.

காங்கிரஸிற்கு 18 ஸ்தானங்களே கிடைத்துள்ளன இந்த நகரசபையின் வரலாற்றிலேயே முதல் தடவையாக காங்கிரஸ் அல்லாத மாற்றுக் கட்சியினருக்கு பெரும்பான்மை ஸ்தானங்கள் கிடைத்துள்ளன

கால காலமாக காங்கிரஸின் தனிக் குத்தகையாக இருந்தது இந்த நகரசபை.

ஓட்டளித்தவர்களில் சரிபாதி பெண்கள் என்றும் தெரிய வருகிறது.

## ரஷ்யாவில் 'ஸ்பூட்னிக்' தபால் தலை

மாஸ்கோ, மார்ச் 23—
சோவியத் பறக்கவிட்ட 2-வது செயற்கைச் சந்திரன் (ஸ்பூட்னிக்) உலகை 2000-ம் தடவை வலம்வந்துள்ளதை ஒட்டி சோவியத் அரசாங்கம் பிரத்தியேகத் தபால்தலைஒன்றை வெளியிட்டுள்ளது என்று டாஸ் அறிவிக்கிறது.

# தனியார் தொழில்களுக்கு ஊக்கமும் உதவியும் அளிப்போம்

## கேரள கைத் தொழிலமைச்சர் விளக்கம்

திருவனந்தபுரம், மார்ச் 20—
எல்லாத் தொழில்களையும் தேசியமயமாக்குவது என்ற பிரச்சினை கிடையாது. தனியார் துறையில் ஆரம்பிக்கப்படும் தொழில்களுக்கு ஊக்கமும் உதவியும் அளிக்கப்படும் என்று கேரள ராஜ்ய கைத்தொழில் துறை அமைச்சர் கே. பி. கோபாலன் சட்டசபையில் கூறினார்.

இதர ராஜ்யங்களிலிருந்து தொழிலதிபர்கள் வந்து கேரளத்தில் தொழிற்சாலைகள் தொடங்குவதை வரவேற்போம் என்று அவர் கூறினார். ஆனால் இதற்காக காலமெல்லாம் காத்திருக்க முடியாது இந்த ராஜ்யத்திலுள்ள தொழில் பிரமுகர்கள் தொழில்களைத் தொடங்க முன்வரவேண்டும். சர்க்கார் சகல உதவிகளும் அளிக்கத் தயாராக இருக்கிறது என்றார்.

தொழிலதிபர்கள் இங்கு வராமல் முட்டுக்கட்டை போட கேரளத்தில் அராஜகம் நிலவுவதாகச் சிலர் அவதூறுப் பிரசாரம்நடத்துகின்றனர். தொழிலபிவிருத்தியை பாதிப்பதற்கு இந்ததுஷ்பிரசாரம் ஒரு காரணமாகும் என்றார்.

தொழில்களுக்கு 2 கோடி 8 லட்சத்து 28 ஆயிரத்து 8C0 ரூபாய் மான்யம் நிறைவேற்றப்பட்டது.

Printed & Published by S. Krishnaswamy at Janasakthi Press, Madras-1
Editor: P. JEEVANANDAM.